இந்தக் கதையில் வரும் ஒட்டகம் தன் வாழ்நாள் முழுக்க ஹலீம் என்ற வியாபாரிக்காக உழைத்தது. வாசனைத் திரவியங்கள், பேரீச்சை, நறுமணப்பொருட்கள் , பட்டு, வெள்ளி மற்றும் கம்பளி ஆகியவற்றால் நிரப்பப்பட்ட மூட்டைகளை சுமக்க வேண்டும். மணல் குன்றுகளின் மீது ஏற வேண்டும். களைத்துப் போனாலும் ஓடிக்கொண்டே இருக்க வேண்டும். இந்த துயர வாழ்க்கை மாறாதா என்று ஏங்கும். திடீரென்று ஒரு நாள் தேவதூதன் தோன்றுகிறார். . .

* * * * * * * * * * * *

தீர்க்கதரிசியான நபிகள் நாயகத்தின் வாழ்வில் நடந்த சம்பவங்களை எடுத்துச்சொல்லும் ஹடித் என்னும் நாட்டார் கதைவழக்கை, இந்த ஆசிரியர் முதன்முதலில் இலங்கையில் கேட்டார். எல்லா உயிர்களிடமும் பரிவு காட்டச் சொல்லும் உன்னதமான கதையிது. இது லிண்டா வொல்ஃப்ஸ்க்ரூபரால் இதயபூர்வமாகவும் மிக்க மரியாதையுடனும் படமாக்கப்பட்டுள்ளது. அவருடைய படங்களும் காட்சி தளங்களும் ஈரானில் அவர் வாழ்ந்த அனுபவத்தை பிரதிபலிக்கின்றன.



செங்கடலுக்கு கிழக்கே ஹேஜஸ் மலைகளைத் தாண்டி இருக்கும் நிலப்பரப்பில் ஒரு ஒட்டகம் வாழ்ந்து வந்தது. அது தன் வாழ்நாள் முழுக்க, ஹலீம் என்ற வியாபாரிக்காக பாலைவனத்தின் குறுக்கே பொதி சுமக்கும் வேலையை செய்து வந்தது. இப்படிப் பலமுறை, பாலைவனச் சோலையான அல் ஹஸா விலிருந்து ஜெட்டா கடற்கரைக்கு நடையாய் நடந்திருக்கிறது.





அந்த வயதான ஒட்டகம் வாசனைத் திரவியங்கள், பேரீச்சை, நறுமணப்பொருட்கள் , பட்டு, வெள்ளி மற்றும் கம்பளி ஆகியவற்றால் நிரப்பப்பட்ட பெரிய மூட்டைகளை சுமந்து சென்றது. ஒவ்வொரு பயணத்தின் முன்பும் அந்த  வியாபாரி ஒட்டகத்தை கீழே உட்கார வைத்து அதன் முதுகில் எல்லா மூட்டைகளுக்கும் மேலேறி படுத்துக்கொள்வார். பின்னர் அந்த ஒட்டகம் எழுந்து நடக்கத் தொடங்கும்.



செங்குத்தான மணல் குன்றுகளின் மீது ஏறி உச்சியை அடைந்து பிறகு தட்டுத்தடுமாறி மறுபுறம் இறங்கும்போது மூட்டைகளோடு கிட்டத் தட்ட உருண்டு விழுவது போலிருக்கும். பாலைவனத்தின் சமவெளிப் பரப்பில் பொழுது சாயத் தொடங்கும்போது சந்தையை சீக்கிரம் அடைய வேண்டும் என்பதற்காக வேகமாக ஓடு என்று ஒட்டகத்தை முடுக்குவான்.

வழியில் ஓய்வு என்பதே கிடையாது. ஒட்டகத்தின் முழுவாழ்வும் பாலைவனம் எனும் அந்த பெருங்கடலை கடக்கும் போராட்டத்திலேயே கழிந்துவிட்டது. இலக்கை அடைந்தவுடன் ஒட்டகம் மூச்சு இளைக்க வாயில் நுரை தள்ள களைத்து நிற்கும். ஹலீம் இறங்கி நிழலில் அமர்ந்து கொண்டு மற்ற வியாபாரிகளிடம் பேரம் பேசுகையில் ஒட்டகம் பொறுமையாக காத்துக் கொண்டிருக்கும்.



பல வருடம் சுட்டெரிக்கும் வெயிலில் மணல் அலைகளில் நடந்திருந்த ஒட்டகம் ஒரு நாள் திடீரென்று தன் கண்களில் நீர் பெருகுவதை உணர்ந்தது.முதலில் அதற்கு ஒன்றும் புரியவில்லை. காற்றில் இருக்கும் மணல் கண்ணில் பட்டு வலிக்கிறதோ என்று நினைத்தது. ஆனால், கண்களில் நிரம்பியிருந்தது அதன் கண்ணீர் துளிகள்.



ஒட்டகம் அசையாமல் நின்றுகொண்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டது.வியாபாரி கீழே இறங்கி அதனை முறைத்துப் பார்த்தான். களைத்து சோகமாக காட்சியளித்த ஒட்டகத்தினிடம் "மெதுவாக நடந்தாயானால் குடிதண்ணீர் கிடைக்கவும் வெகு நேரம் ஆகும்" என்று சொல்லிவிட்டு மீண்டும் அதன் மேல் ஏறிக்கொண்டான்.



அந்த வயதான ஒட்டகம் அதன்பிறகு ஒருபோதும் ஹலீமிடம் தன் சோகத்தைக் காட்டவில்லை. மாலையில், மூட்டைகளுக்கு இடையில் ஹலீம் தூங்கிக்கொண்டிருக்கும்போது, ஒட்டகம் பரந்து விரிந்திருக்கும் வானத்தின் கீழ் பெருமூச்சு விடும்.

அது அதன் மூக்கு கயிறு மணலில் பட உலாவிக்கொண்டு உதட்டைக் கடித்துக்கொண்டு விண்மீன்களை பார்த்துக்கொண்டிருக்கும். துன்பமும் கடின உழைப்பும் மிகுந்த தன் வாழ்வைப் பற்றி சொல்லிக்கொள்ள யாருமில்லையென்று எண்ணி தனிமையில் வாடும்.



அடுத்த சில மாதங்களுக்கு ஒட்டகம் தொடர்ந்து வெயிலில் நடந்து சென்றது. ஆனால் இரவில், அது முதுகில் கட்டியிருந்த மூட்டைகளுடன் ஒரு படகைப் போல அலைந்து திரியும். பின்னர் ஏதாவது ஒரு மணல் திட்டுக்கு பின்னால் படுத்துக்கொண்டு, காலை வரை பெருமூச்சு விட்டபடி இருக்கும். ஹலீமைப் பொறுத்தவரை, நன்றாகத் தூங்குவான். பகலில் அவர் ஒட்டகத்தின் முதுகில் சவாரி செய்யும்போது, விலைமதிப்பற்ற மூட்டைகளின் மீதமர்ந்து பறப்பது போல இருப்பான். ஒட்டகம் ஒன்று இருப்பது அவன் கண்ணுக்கே தெரிவதில்லை.



ஒரு நாள் அவர்கள் மதீனா நகரத்தை நெருங்கிக் கொண்டிருந்தனர். மதீனா நூற்றுக்கணக்கான பூங்காக்களைக் கொண்ட ஒரு அழகான நகரம். தீர்க்கதரிசியான நபிநாயகம் அங்கு வசிப்பதாகக் கூறப்பட்டது. ஹலீம் தெற்கே நஜ்ரானுக்குச் செல்வதற்கு முன்பு அங்கே ஓய்வெடுக்க திட்டமிட்டிருந்தான்.

அவர்கள் குறுகிய நகர வாயில் வழியாகச் நுழைந்து உயர்ந்த பனை மரங்களின் நிழல்கள் நிரம்பிய ஒரு பூங்காவிற்குள் சென்றனர். ஹலீம் ஒட்டகத்தை சுட்டெரிக்கும் வெயிலில் ஒரு தூணில் கட்டினான்.

பின்னர் நிழலில் சென்று அமர்ந்தான். தண்ணீர் குடித்தான், சில பேரீச்சம்பழங்கள் சாப்பிட்டான். மற்ற வணிகர்களுடன் வியாபாரம் பேசினான். இதெல்லாம் முடிந்ததும்,மணலைக் குவித்து,ஒரு தலையணை செய்து படுத்து தூங்கி விட்டான்.

ஒட்டகம் அதன் முதுகில்
மூட்டைகளுடன் தனியாக
நின்றது. சில மணிநேரங்கள்
கடந்தன. அது கொதிக்கும்
வெயிலில் பொறுமையாக
நின்று கொண்டே இருந்தது.



மதீனாவில் வசித்துவந்த நபிகள் நாயகம் அன்று பிற்பகல் அந்த பூங்காவிற்கு நடப்பதற்காக வந்தார். வந்தவர் நிழலில் படுத்து தூங்கிக் கொண்டிருந்த வியாபாரியைப் பார்த்தார்.

பிறகு வெயிலில் நின்று கொண்டிருந்த ஒட்டகத்தைப் பார்த்தார். அந்த ஒட்டகம் தூணில் கட்டப்பட்டு களைப்புடனும் சோகத்துடனும் நிற்கவே முடியாமல் தவிப்பதைப் பார்த்தார்.



நபிகள் நாயகம் நேரே ஒட்டகத்திடம் சென்று தன் முகத்தை அதன் முகத்தோடு ஒட்டிக் கொண்டு ஒட்டகத்தின் கழுத்தை அணைத்துக் கொண்டார். வியப்பில் விரிந்த ஒட்டகத்தின் கண்களை பரிவுடன் நோக்கி தன் தோளை அதற்கு ஆதரவாய் கொடுத்தார். அவர் தோளில் சாய்ந்துகொண்ட ஒட்டகத்தின் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடியது. அதனிடமிருந்து துன்பப் பெருமூச்சுகள் நீண்டு வந்தன. யாருக்கும் தெரியாமல் அழுகின்ற விலங்குகளின் உடல் குலுங்குவதைப் போல ஒட்டகத்தின் மொத்த உடலும் குலுங்கியது.

அப்போது ஒரு அதிசயம் நடந்தது. ஒட்டகத்தின் கண்களில் இருந்து வழிந்த கண்ணீர் மணல் மீது விழுந்து கீழே இறங்கியது. எப்படியோ அத்துளிகள் ஹலீமின் கனவில் போய் சேர்ந்தன.

சற்றைக்கெல்லாம் ஹலீம் ஒட்டகத்தின் கண்ணோட்டத்தில் பார்க்க ஆரம்பித்தான்.





குளிர்ந்த நிழலில் கனவு கண்டு கொண்டிருந்த ஹலீம் தனது இதயம் வலிப்பதை சோகத்துடன் உணர்ந்தான். முதன்முறையாக ஒட்டகத்தின் களைப்பையும், அது வெயிலில் வாடுவதையும் கண்டான். ஒட்டகத்தைப் போலவே தானும் வலியும் தனிமையும் நிறைந்த வாழ்க்கையே வாழ்ந்ததாக உணர்ந்தான்.ஹலீம் கனவில் அழுது அழுது தலையணையாக செய்திருந்த மணலை நனையச் செய்தான். அந்தப்பக்கம் ஒட்டகம் நபிகள் நாயகம் மீது சாய்ந்து கொண்டு அழுது கொண்டிருந்தது.



ஒட்டகம் அழுது ஓய்ந்த போது, நபிகள் தூக்கத்தில் இன்னமும் அழுது கொண்டிருந்த ஹலீமை கவனித்தார். "நீ தான் இந்த ஒட்டகத்தின் சொந்தக்காரனா?" என்று கேட்டார்.

பாதித் தூக்கத்தில் இருந்த ஹலீம் "தேவ தூதனே, நான்..." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தவன் பொங்கிவந்த துயரத்தால் வாயடைத்துப் போனான்.

"ஒட்டகத்தின் துயரம் உன் கண்களுக்கு தெரிகிறதா?" என்ற நபிகளின் கேள்விக்கு அவனால் பதில் சொல்ல முடியவில்லை. நபிகள் நாயகம் திரும்பி மெதுவாக நடக்கலானார்.

ஹலீமின் முகம் அனலாக கொதித்தது. காய்ச்சலடிப்பது போலிருந்தது. கதிரவனின் தீப்பிழம்புகள், அன்னாசிப்பழ செடியின் முட்கள் போல அவனது முகத்தில் குத்துவதாக உணர்ந்தான்.
ஒட்டகம் நபிகள் நாயகம் போவதையே பார்த்துக் கொண்டிருந்ததைக் கவனித்தான்.





ஹலீமின் முகத்தில் கண்ணீர் வழிந்தோடிக் கொண்டிருந்தது. அவன் ஒட்டகத்தின் அருகே சென்று கட்டை அவிழ்த்துவிட்டான். பின்னர் அதன் கழுத்தை தடவிக் கொடுத்துக்கொண்டு அதன் அருகில் நின்றான்.

ஒட்டகத்திற்கு தண்ணீர் கொடுத்தான். பின் மரங்களின் நிழலில் அதைக் கட்டினான்.

“ஒன்றும் அவசரமில்லை. நாம் சிறிது ஓய்வு எடுத்துவிட்டு செல்வோம்” என்று அன்புடன் சொன்னான்.

